[redacted]



ழும் - வெண்ணிற முத்தமா லிகையுமின நிலவுசெய வெய்யே மனத்தடத்
தக், தண்டலமை யாதலர் சரோருகப் பதமேற் சதங்கையுந் தண்டையு
மொளி - தவாஞெழி யும்படீஇக் கலகல விரட்டவுயர் சைவநிலை யெங்குநிக
ழக், கொண்டலமர் கொடைகொண்ட காதலச்சேவையார் குலசிகாமணி வரு
கவே - கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப்பிரான்
வருகவே. (க)

நிலவுவிரி மதியுமொண் பனியுமுவ வாவெனினு நெஞ்சமெப் பொழுதுநெக்கு
நெக்குருக வார்மதியு மத்தகையர் சட்பனியு நேரேயு வத்தல்செய்வ [றுங்
கலவுசெம் மையுமனமு மூடைமைக் கிணங்கவெவர் கடையினவை யுள்ளவே
காமுறவ வனிவிரா வுறமலர்வ வாயகோ கனகநறு மலரிரண்டு
முலவுதவி லன்புசெறி யுந்தலைப் பெயராமை யுள்ளவே னும்பெயர்த்தே
புலகையெங் கட்குவர மறசமய ருக்கெலா முட்குவா முறவலித்துக்
குலவுபுக ழேபோர்வை யாக்கொண்ட சேவையார் குலசிகாமணி வருகவே[வே.
கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப் பிரான் வருக

நீடும்ன் பரிவையர் புணர்ப்பென்ம ரும்மைந்து நிகழ்கந்த முங்கெடுதலே [ரு
நிலவுமின் பென்மருங் குணமூன்ற மொழிதலே.நிரம்பலுற மின்பென்ம
ராடுமின் பிருவினைக் கேடென்மரும்மல நசித்தலே யின்பென்மரு
நவில்விக்கி ரகவித்த மின்பென்ம ருந்தோன்று ஞானமே யின்பென்மரும்
பாடுமின் புயிர்கெடுத லென்மரும் பகுதிமேற் கெடுதலே யின்பென்மரும் .
படுசித்தி யின்பென்ம ரும்பிறரும் வாதம் படர்ந்துவரு திறனறவளங்
கூடுசேர் தமிழருமை யறிபெருஞ் சேவையார் குலசிகாமணி வருகவே [வே.
கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப் பிரான்வருக

சேற்றசெங் கன்னல்படு தாளமுங் கந்திச் செழுஞ்சோலை படுதாளமுந்
திண்மருப் புக்கடாக் களிறுமறை யப்போய செஞ்சாலி படுதாளமுந்
துற்றபைங் கதலியிற் படுதாள மும்பாலி துறைதொறு மெடுத்துவீசுஞ்
சுடர்மணிக் ளுங்கரும கடவுவோர் வாருபு சுமந்துகொடு வந்து தூய
முற்றமென் கணுநிறை தாக்குவித் திடல்கண்டு மோகமுற் றோடியாடி [துக்
முகந்திடறி யெற்றியொன் றுக்கிவிளை யாடுசிறு முண்டகத் தாள்பெயர்த்
கொற்றவன் றருமுதன்மை கொண்டுமிளிர் சேவையார் குலசிகாமணி வருகவே
கொன்றைச்சடாடவியர் மன்றைப்பராவியெழு குன்றைப்பிரான்வருகவே.

மாயா மலக்கரும மலமிவைக் கேதுவா மலம்வே றொடுங்கமூன்று
வலியதன் சத்திகெடு மாறுதிரு வருள்பதிய வந்துபதி செம்மலர்த்தா
ளாயாத வெம்மனமு மகலாத தாளடிய ரவிர்புதல்வர் தோழர்தாங்க
ளடைக்கமார்க் கம்பொலிய வெண்ணுந் திருத்தா ளராவுரி நிகர்த்தநூச
காயாத கானித்த மலரொடு விரித்தவிக் கடையிற் பெயர்த்துவைத்துக்[ல்லாக்
கருங்கொண்டல்போல்வா னு மிகையெனக்கடல்சூழ்ந்த காசினியுளாரையெ
கூயா தரிக்குங் குணந்தழுவு சேவையார் குலசிகாமணி வருகவே [வே.
கொன்றைச் சடாடவியர் மன்றைப் பராவியெழு குன்றைப் பிரான்வருக

## வேறு.

நலத்தி னுயரும் பழையனூர் நாளும் பொலியு மவையகத்து
நலிவு புரிநீ லியைக்கண்டு நடுங்கா நின்ற வணிகனுக்கு
நிலத்தி லியனின் னுயிர்க்கிறுதி நேரு மாயி னியாமெல்லா
நெருப்பின் முழுகி யுயிர்துறப்போ நீயோ ருதியென் றுரைத்தபடி
வலத்தி னுயரச் சொற்றவரு வண்ண மெழுராக் குழிமுழுகி
வடவா ரணியத் தாடொருவர் மலர்த்தா ளடைந்த வெழுபதின்மர்
குலத்தி னுதித்தா ருண்மழைபெய் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (௧)

அண்ட மளவும் வளைநாட்டி லரசர் கலக மாதலினா
லாங்காங் கொருவி வணிகரெலா மயனுட் டகம்புக் கினிதமர்ந்து
விண்ட கலகத் திறந்தெரிந்து மேய தத்த மிடம்புக்க
விதமுன் னுணர்ந்து தஞ்சரணு மேவி யிருந்த மடக்கொடியை
மண்ட வழைத்துக் கொடுசென்றிம் மடமா தினைக்கொள் ளுதிரென்ன
மயக்கல் கண்டு தங்கையெனும் வாய்மை கொடுமைத் தனக்கேன்மை
கொண்ட குலத்தி னுதித்தருள்பெய் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக் குன்றைக் கோமான் வருக வருகவே. (௨)

வீற்றங் கியலி பூதியினால் விளர்ப்புற் றன்பின் வழியகற்றி
வேறு வேறும் பரசமய வெய்ய கோடை முழுதொழியச்
சிற்றம் பலநா யகர்கருணைத் திரைவா ரிதியிற் படிந்துண்டு
திசையெங் கணுந்தோற் றிடமின்னித் திய வொழுக்கத் தபக்கறுத்துக்
கற்றங் கமையார் மலத்துன்பங் கழல வரமா முழக்கெழுப்பிக்
கருதா நின்ற திருத்தொண்டர் காமர் வாய்ந்த சரித்திரமாங்
கோற்றம் பொலியு மழைபொழிந்த கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (௩)

வின்னு மலரா தனத்தானும் வெய்ய சதரி சனத்தானும்
விரும்பு மதிகா ரக்கதையா விளம்பா நின்ற கோன்கொள்ள
சன்னும் பிரம சரியரெலா நாடும் பலாசக் கோல்கொள்ள
நான்கா மாச்சி ரமத்தமைந்தார் நயந்து முந்நூழ்க் கோல்கொள்ளத்
தென்னும் வணிகர் குலமெல்லாந் தேற்றத் துலாக்கோ லதுகொள்ளச்
செம்பொன் மோலி யரசரெலாஞ் செங்கோல் கொள்ளச் சிறகோல்கைக்
கொன்னுங் குலத்தி னுதித்தவருட் கொண்டல் வருக வருகவே
குன்றைப் பொருமா ளிகைக்குன்றைக் கோமான் வருக வருகவே. (௪)

என்னுந் திறத்துப் பரசமய ரேறு வருக தேறதலி
லெங்க ளுணர்வின் கணுமதுரித் தினிக்கு மிருங்கோற் றேன்வருக
தென்னும் புலத்தர் பெறுகாம தேனு வருக வருகத்தர்
சிந்தா மணியைப் பொருட்படுத்தாச் செல்வச் சிந்தா மணிவருக

எம்மையினி தான்பவன் செம்மைமதி யோனி யியற்கையே வெண்மை மதியோ - னெற்றைக்கு மிருதண்மை யுடையரோ டுறவுகொளு மியல்பிலு னெங்களையன், வெம்மையுடை யவர்களொடு மதிதோறும் மதிதோறும் விரா யுறவு கொள்ளுவோனீ - வியக்குமொரு தன்மையோ னெங்கள்திரு பாலூர்த்தி மெய்ம்மையொரு கால்வளருவாய், மும்மையுல கறியவொரு காற்றேய்கு வாயிவை முயங்காதோர் காலொழிகுவாய், மொழியுநீ யிவையோர்ந்து மாடவா வென்றது முழுக்கருணை காணென்னுளன்று, மம்மையனை யார்மருவு குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே.

(௫)

குறையுடைய பாம்பொன் றெடுத்துண் டுமிழ்ந்திடக் குலைகுலைக் தழல்வை யெங்கள் - கோமான் பெருங்கல்வி யாட்சியை யுணர்ந்துசெங் குருமணிக் குட்டுமோட்டு, நிறைவுகெழு தத்திப் பணுடவிப் பாம்பொன்று சேரடைய மன்றனுனு - நினையின்ற தொருபாவை யிலகுவே பாரமென சென்றுனைத் தனையு மெண்ணேன், முறையிலொருசிறு துக்கி னெழுபாவை யும்புக முடித் துறநிறுத்தானிவன் - மொழியெங்க டம்பிரான் வல்லப முணர்ந்திலைகொன் முத்தமா லிகைவானயாற், றரைமணித் திடராய குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே.

(௬)

செறிதமிழ்ச் சங்கத்து முதன்மையோ னன்பினைத் தினையென சவின்ற நூலிற் - செப்பிய விதிப்படிக் கிருமைத் தெழுதுகட் செய்யவாய் வெண்ணகைகலார், முறிவற வணங்குதோ றெருவிடுத வால்வளரு மொய்ம்புபெற் றனையெகாளு - மொய்த்தவெகு விடுதலத னல்வளர்த வழவுதொழில் முயலிவன் காட்டுதொழிலே, மறிவரிய விக்கன்றி புள்ளுணர்த் தனைபென்னின் வாரா திருப்பை கொல்லோ - மதியோ னெனும்பெயர் குறிப்புற மற்கவிக மகன்வாதி வாக்கியாய, வறிவர்கழ கம்பரவு குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே.

(௭)

பெருகாவ லோவெனு முழக்கமு மென்பாற் பிறக்குபயிர் கோடிசெடியெலாம்
பெறுங் கருக்கொள்ள நீயுப கரித்தலுட் பெறு திருந்தானலன்
திருகாவ லூரர்சீ காழியார் கூனறத் திருவாய் மலர்ந்ததொப்பச் [த்திலா
செவிக்கோணின் கூனொழிப் பான்வாய் மலர்ந்துகூன் செய்புனிறு முதலை
யொருகாவ லொடுபெயர் பெறும்பொலத் திலுமருமை புராவில்புராணத்திலே
யொப்பிலா வெங்கள்பெரு மானட்பு மதிநிற் குயிர்க்குறுதி செய்வதாகு
மருகாவ லோர்பரவு குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே.
யருளுருத் தேசபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. ()

தலைமயிர் பறித்துமறை யிற்பா யுடுத்துத் தழைத்திரள்கை வைத்துழலுஞ்
சழக்கர்படை யாக்கனக் கம்பரவ வீக்கியுயர் சைவநிலை யெங்குமாக்கு
நிலையுடைய தம்பிரா னின்கனக் கம்போக்கி நிகழ்புனித மெயாக்குவா [ரூர்
வீதியிதன் மேலுமதி யென்னைகொ லினக்கின்று சேரனப் பரிபசான்

கலைபலவு மோருருக் கொண்டலைய ருளுக்கு காதலார் நிற்கவுங்கைக்
கடைக்கணித் தாடவா வென்றழைத் ததுபெருங் கருணையே கங்கை யிறு
கலைமருவு புனல்வளக் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே [மிக்
யருளுருத் தேசபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. ()

காதலொடு வாவென் றழைத்தவுடன் வந்திலான் கருதியதே னென்று சற்றே - கறுக்கச் சிவத்தல்கூ டாதுநான் பூண்டான் களங்கத் திறத்தி னென்ற, போதலுற யாம்புகன் றேமினி முனிந்திடிற் போக்குவே றில்லை யாரும் - புன்மையா னிவனென்றோர் கவிகூறின் முக்கட் புராதனனு முனைவெறுப்பன், வீதலுற வேயன்றி வேறொன்று முன்னதுகொல் விளைகுவ தனைத்துமோர்ந்து - மேயினேன் மேயினே னென்றடையி னலமுண்டு மேலுலக வாழ்க்கையோர்மிக், காதலுற விழைதருங் குன்றைநக ராளியுட னம்புலீ யாடவாவே - யருளுருத் தேசபொலி யருண்மொழித் தேவனுட னம்புலீ யாடவாவே. (க0)

# சிற்றிற்பருவம்.



வாருந் திருவீ தியினொருசார் வண்ணத் திலங்கள் கொடுமுயன்று
வருந்துந் திறத்தே யறிவுசெலு மாண்பா னினது வரவுணரா
தாரு மிருக்கை யெழாதிருந்தோ மறிந்து தருக்கி யிருந்திலமா
வண்ண லஃதுட் கொண்டுபகை யமையப் பாராட் டுதலழகோ
வோரும் புகழ்க்கற் பகத்தளிக ளொருங்கு மொய்ப்ப தேவனென்றே
யும்பர் கடுங்கி நிலைகுலைய வொருவேற் றுமையு முணர்வரிதாச்
சேரும் பொழிற்றண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (க)

ஒழிக்குந் திறத்தி னருகந்த னுறையாநின்ற பாழிகொலவ்
வுறவ ரமரும் பள்ளிகொன்மற் றுள்ளா ராய பரசமயர்
பழிக்கும் படிவா ழிருக்கைகொல்யாம் பாங்கிற் புரியிச் சிறுவீடு
பத்திற் சிதைத்தால் வருகின்ற பயன்புண் ணியமோ புகழ்கொல்லோ
சுழிக்குஞ் செலவிற் பாலிநதி சுரந்து பாய யாலியானைத்
தொண்டை யெடுப்பு மறையும்விதந் துவன்றி வளர்ந்து விளைசெந்நெல்
செழிக்கும் வயற்றண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (உ)

வெய்ய வமையும் பரசமய விருப்பஞ் சுமந்த திருவில்லார்
வினையைச் சிதைத்தி யவர்மாயை வீயச் சிதைத்தி யாணவமு
னையச் சிதைத்தி யிவைசிதைத்தா லும்புகழ்புண் ணியமிரண்டு
நாளு நினக்கு மேன்மேலா நகையா மெங்கள் செயல்சிதைத்தல்
வையம் வியக்குஞ் செங்கரும்பும் வாழைக் குலையும் பசுங்கமுகும்
வயங்கு மிளநீ ரிலாங்கலியு மகவா னவைக்கோ ரலங்காரஞ்

செய்ய வுயர்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (௩)

பொருந்து நிலத்தே ராலுழுதல் புகழாம் விதியு மதுவாகும்
பொருந்தா நிலங்கா லாலுழுதல் புகன்ற விரண்டு மொன்றுமோ
வருந்து மரிய திருவடியு மண்டு புழுதி யடையுநறு
மலர்தோய் பவைமற் றிது தோய்தல் வழக்கோ கண்டார் சகிப்பாரோ
முருந்து முறுவன் மடமாதர் முயங்கும் பொழில்வாய்ச் சுருஞ்சுரும்பர்
முரலா நின்ற பண்கேட்டு முகந்து கொடுக்கும் பொற்காசிற்
செருந்து மலர்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (௪)

உற்றார் சகியார் புனலாட்ட லுரியார் பலரு மடிக்கடியிவ்
வொல்லாப் புழுதி தோய்வெவனென் றுரைப்பார் தவஞ்செய் தருமருந்திற்
பெற்றார் செவியோ ரினும்பதைப்பார் பிறங்கக் காணி லென்படுவார்
பேசா வருமை பாராட்டிப் பேணி யெடுப்பா ரையுஞ்சினப்பார்
கற்றா ரரிய நூல்பலவுங் கண்டார் விளங்க நாலினுரை
சமைத்தார் வரைந்து வெனடியிற் கலந்தார் கடிந்து பரசமயஞ்
செற்றார் செறிதண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (௫)

தாங்கும் வளவ னனபாயன் றன்கண் மணியா யவனமைச்சர்
தங்கள் சூளா மணியாயுத் தமச்சோ ழப்பல் லவனெனும்பே
ரோங்கும் படிகொள் விண்மணியா யுவக்கு மடியார் சரித்திரமுற்
றுரைசெய் தருள்சிந் தாமணியா யுயர்வு பூணி னிளம்பருவ
வாங்கும் பிறைநன் னுதலார்செய் வண்டல் சிதைக்க வேண்டுவதோ
வாழைக் குருத்து மதிநடுப்போய் மாரன் குடைக்கோர் காம்பாகித்
தேங்குந் திருத்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (௬)

ஏத மகல வளவன்முன மேற்று குடிக ளொருநாற்பத்
தெண்ணா யிரத்து ளொருகுடியென் றியம்பே மபய னமாத்தியருட்
போத மருவு மொருவ னெனப் புகலேம் புராணஞ் செய்தாருட்
பொலியு மொருவ னெனநவிலேம் புகலின் மூவ ருளுமொருவ
னோத மகன்ற பரமனென நவிலி னடைவ தடையுமென
நன்று தெரிந்தே மெங்கள்செய னயவா திருக்குந் திறமென்னே
சீத வளத்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (௭)

பொன்னஞ் சிலம்பு புலம்படிமண் பொருந்தித் தளையும் விழைவடையிற்
பொலியும் பற்ப லுபநிடதம் புகறல் கேட்டு நீயொருவு
முன்னங் கொள்சிற் றிலர்நுதலின் முயங்கிப் படிந்த மண்டோய்ந்து
முருங்கத் திளைதல் கூடிடினம் மோக மவர்த்தீ தெய்வாரே

காமர் பொய்கை நீர்கலக்கல்
கன்னங் கரிய கடாப்பாய்ந்து
கழிக்தோட் டெடுக்க வாலெழுந்து கடுக மோதப் பலவுதிருந்
தென்னம் பழத்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (அ)

மாறு படுமன் னவரெனினும் வளவன் கழற்கா ளுழினவர்வாழ்
மணிமா ளிகைகண் மிக்குயரு மாறு விடுப்பாய் மறையோர்மூற்
கூறு படுகம் பாணடியார் குறிப்புள் ளுணர்ந்து கெடுவா னுங்
குறக நிமிர்மா டங்கள்பல குயிற்றிக் கொடுத்துக் குடியமைப்பாய்
வேறு படுமா நியாம்வகுத்த வீட்டை விடுத்துச் செலின்வரலென்
வேழக் கரும்பின் சாறோடி விரிந்த காம்பும் பாய்ந்துகுழை
சேறுபடு தண்டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (க)

அலைக்கும் புனல்சூ ழம்பலத்தி லாடும் பெருமா னருள்பெற்று
வன்செய் தொழிலோ ளாக்தணடு வமைந்த தொழிலோ மேற்கோட
விலக்கும் கடையென் றுழித்தனையோ நினையா நிற்கு மனுக்கிரக
நீயே யதுசெய் யாவிடினெங் கிரப்பு நீக்கு பவரியாரே
மலக்கும் பிறவிப் பிணிமருந்தே வாழ்த்து வார்சிந் தாமணியே
வயங்குஞ் சைவப் பெருவாழ்வே மாறாக் கருணை மாக்கடலே
சிலைக்குந் தமிழ்த்தண் டகநாடா சிறியேஞ் சிற்றில் சிதையேலே
செல்வஞ் செருக்கு குன்றையருட் செல்வா சிற்றில் சிதையேலே. (க0)

---

# சிறுபறைப்பருவம்.



ஆபபா சமயக் கருங்கடா யானைக் கரிக்குருளை வாய்முழக்கு
மரும்புகழ்ச் சைவப் பசும்பயிர்க் குலகுகு மூழியுண்புயன் முழக்கும்
பாயமிடி யாளருக் களவில்பொன் செறிசெய்த பண்டார வாய்திறந்து [க்கு
பலவுங் கவர்ந்திடுமி னெனதெரித் திடுகொடைப் பயன்முரசி னெழுமுழ
சேயமிகு வளவர்பெரு மாற்காக வப்பாரி னோர்ந்ததன் படையெழுப்பு [ர்ந்து
நிலாம்பணை முழக்குமா கக்குணின் மலர்க்கை கொடு நிகழ்பாலி வளனுண
தேயமுழு தம்பரவு தண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே [ளே.
தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியரு

ஒங்குமுனி வரிருவர் கைகுவித் தாமுழக் குறவெழுப் பிக்களிக்க
வுலகமுழு தின்றசிவ காமவல் லித்தா யுலோசனம் விடுத்துநிற்கப்
பாங்குபுனை செம்பொனம் பலாடன நவிலும் பரஞ்சோதி மதுவொழுக்கும்
பச்சைத் துழாயண்ணன் மத்தள முழக்கினும் பரவுபே ருவகைகூப்ப
வாங்குதிரை யாற்பாலி வீசுசெம் மணியும்வெள் வயிரமுங் களைவிராவ [டுக்குங்
வண்படுகர் மேயும்வளை கோட்டெருமை யதுகண்டு வாய்வெரி இயோட் டெ

தேக்குதிரு வம்பாவு துண்டீர வளநாட சிறுபறை முழக்கியருளே
தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியரு [ளே.

புகழ்சரியை கிரியையை யனுட்டித்து வருகின்ற புண்ணியப் பேற்றினர்க்கு
புலரியிற் சிவபிரான் றளியெழுஞ் சங்கமுற் போதரு முழக்காகவு
மிகழ்வில்சிவ யோகசா தனமரீஇ யம்முறை மியங்குதிற லாளருக்காங்
கெழுகின்ற சங்கபட கம்பேரி யாதியி னிசைப்பெரு முழக்காகவு [ப்
மகழ்கின்ற பாலியாற் றலையெழீஇக் கற்பக மலைத்தோட வதனடிக்க
ணவாய்கின்ற காமதே னுவை நோக்கி நின்று லமைந்திதிப் படரெனனி
திகழ்கின்ற செல்வமுயர் துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே [ளே.
தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியரு

ஆன்றசிவ புண்ணிய முழக்கமும் பற்பலவ ராயவடி யவர்தம் வரலா
றாகிய சரித்திர முழக்கமுந் தெய்வமண மகலாத தமிழ்முழக்கு
மேன்றபல வாமுழக் கமுமிணை யிலாதாய வினியதிரு வருண்முழக்கு
மெய்துதற் கரிதாஞ் சிவானுபோகப்பே ரிரும்பெரு முழக்குமான [கண்
மான்றபைங் கமுகம் பொழிற்றலைத் தவிர்செய்ய மதிவதிறை தேத்தடைக்
வான்பிறைக் கோடுதற் கவரின னெனக்கிள வாவிகுள மோடை யெங்குந்
தேன்றவழ வதுவிழுந் துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே [ளே.
தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியரு

• வில்லூரு மணிமோலி வளவர்பெரு மான்பொனடி வீழாத மருவலர்க்கும்-வெண்ணீறு கண்மணி புனைந்தைந் தெழுத்தெண் ணீனராஞ் சமயருக்கு, மெல்லூரு மொண்சிவ மணங்கமழ்த லில்லா தியைந்தசிந் தாமணிமுத - லெக்நூற்கு நெய்தலம் பறைமுழக் கேயாக வெல்லொளி மழுக்குமேனிச், சொல்லூரு மெம்பிரான் பெருமதம் பொழிமண் டுழாக்கைமா வியானைதந்த - தோற்போர்வை போர்த்தெனத் தென்றல்வந் துலவுழ ரேற்றுதேமாஞ் சோலைமேற், செல்லூரு மேன்மையமை துண்டீர வளநாட சிறுபறை முழக்கி யருளே - தென்றலங் கன்றுலவு மன்றவொண் குன்றைமுனி சிறுபறை முழக்கியருளே. (௯)

வேறு.

பிதிருத் தாமற வின்பா லளவிப் பிழிசுவை மதுவிரவிப்
பிறங்கிய புல்ல கண்ட கிரீஇச்சுவை பெறுங்கன் டெக்கூட்டி
யெதிரும் பொருளில் பலாக்கனி மாங்கனி யிவை வாழைக்கனிமு
னியையு முழுக்கனி முந்திரி கைக்கனி யிவ்விரதமு காட்டி
யதிருங் கடலமிர் தமுமு ளூறுத்தி யவாங்குழல் வீணையிசை
யத்தனை யும்புக வைத்துச் சிவமண மகலா தேதமழ
முதிரு மருட்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரான் முழக்குக சிறுபறையே. (௰)

அத்தி தருங்கவி யென்மரு கன்று வறைகுதி ரம்மட்டோ
வவாவிய புத்தி தருங்கவி யென்மரு மதுமட் டோவின்னுஞ்

சித்தி தருங்கவி யென்மரு மெல்லாத் தீர்த்தங் களுமுறமா
செய்யாச் சுத்தி தருங்கவி யென்மருஞ் செப்பிய வம்மட்டோ
பத்தி தருங்கவி யென்மரு மாகிப் பாரிற் புலவரெலாம்
பல்லா ரோதுபு பாராட் டக்கதி பத்திய பல்லோர்க்கு
முத்தி தருங்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (எ)

கனிவி லெமைப்பொரு வார்களு நெஞ்சு கரைந்து கரைந்துருகக்
காமரு பத்தியும் வயிராக் கியமுங் கவினக் குதிகொள்ளத்
தனிவில் பொன்மேரு வெனக்கொடு திரிபுர தகனம் புரிபெருமான்
நயங்குபொ னம்பல நின்றுபல் லோரஞ் சலிசெய நடநவில
நனிவி லிடும்புகழ் மிருசம் பந்தரு காவுக் கிறையவரு
காவலர் கோவுஞ் சிரகர கம்பித நன்கு புரிந்தருள
முனிவி றமிழ்க்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (அ)

நந்து புராணமெவ் வளவா யிற்றென நாடுறு மனபாய
னவைமகிழ் பூப்ப மணிக்கா லாயிர நண்ணிய மண்டபவாய்
வந்து விராவு மிடத்தி னமர்ந்து வயங்குறு கையேட்டின்
மாண்பார் கண்டங் கொண்டங் கெழுதுநர் மாறு தேயெழுதப்
பிந்து வரைந்த வெழுத்தினு மொன்றும் பெயரா தக்கரமாம்
பெயர்ப்பொரு டேற்றுபு நிலைபெற யார்க்கும் பெட்கும் விருப்பமெழ
முந்து தமிழ்க்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (௯)

தங்கு தமக்கெதிர் நின்றுள முருகத் தரிசித் திடுவளவன்
றன்செவி பரிசன ரஞ்செவி மறையவர் தஞ்செவி யுங்கேட்க
வெங்கு மளாம்புக ழிச்சே வையர்கோன் யாமே முதனல்க
வெம்மடி யார்வர லாறு முழுக்க வினிக்கப் பாடினனாற்
பொங்கு விருப்பிற் கேட்குக வென்னப் பொன்னம் பலவாணர்
பொலிதிரு வாக்கடி னெகிழியி னொலியொடு பொற்ப வெழுப்பவருண்
முங்கு தமிழ்க்கவி பாடிய புலவன் முழக்குக சிறுபறையே
முழுமணி மாடக் குன்றத் தூரன் முழக்குக சிறுபறையே. (கO)

## சிறுதேர்ப்பருவம்.



மருவாய் நறுந்தா தகித்தொங்கல் வளவர்கோ மகனுட னிவர்ந்திருகையு
மணிக்கவரி வாங்கிவீ சக்கற்பகப்பூ மகிழ்ந்து வானுடர் தூற்றப்
பெருவாய் திறந்துபட கம்பேரி முதலாம் பெரும்பணை யெலாமுழங்கப்
பிறங்குமூ வாயிரவர் முதலியோர் மறையொலி பிறங்கத் தொடர்ந்துபோதக்
கருவா யுறுமற்றை யாருந் தலைக்குமேற் கைகுவித் தேத்தி மேவக்
கருதும் புராண முடிவிற்குஞ் சாத்தில கடத்திவர்ந் தோங்குதில்லைத்

தெருவா யுலாப்போது சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞெேன் சிறுதே ருருட்டியருளே.()

முறியுமல ரும்பொருவு திருமேனி யுமையம்மை மூவுலகுயத்தழுவுபு
மூரிப் புனற்கம்பை யெம்பிரான் திருமேனி முற்றுக்குழைத்தஞான்றி
லறியும்வகை யறமெலாம் பொலியவிரு நாழிநெல் லளந்தப் பிரான்கொடுக்க
வனையமா தேவியேற் றேற்றகை யுயிர்த்தமக ளாலுயிர்த் தோர்கணேநன்
னெறியுநல னும்பெருக வுளமெனல் குறித்தவர்கை நீட்டப் பணிந்து வாங்கி
நீடுங் கொழுக்கொடுசம் மனையுதவி யானனி நிரம்பப் பெருக்கு குடியுட்
செறியுமொரு குடியாய சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞெேன் சிறுதே ருருட்டியருளே.()

வெருவப் பகைக்கடல் சுவற்றழ லரும்புகண் விழைத்தாத கித்தொடையலான்
வீசவீ சப்பெற்று வாம்பரி யுகைத்துமிளிர் வெங்கடாக் களிறுகைத்து
முருவக் கதிர்த்தரள மாலைகால் யாத்திட்ட வொள்ளொளிய யான மூர்ந்து
மொருநம்பி யாரூர னைப்புகலி யாண்டகையை யொப்பா யினையதான் று
மருவப் பொலிந்த மட்டேரூரின் முதலடி மரீஇயவிரு வருளொருவரு
மானுவாய் வையக மெடுத்தேத்த நிறைபுனல் வயங்குமூ ருணிநிகர்த்த
திருவப் பெருக்கினமை சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞெேன் சிறுதே ருருட்டியருளே.()

வஞ்சதவிர் வினைத்திட்பம் வாய்ந்தாக வப்பாரின் மாற்றல ரெதிர்ந்த காலை
மழைமதக் களியானை வாம்பரி சயந்தனமுன் மற்றுள வருதினிபெலா
மசைவில்பல் படைக்கலங் கொடுதூழி லாட்டுபுப லாரு வெழுந்த செய்த்தோ
ரவ்வனிக வழனிமுத் தோடியுவ ராழிபுக் களவிறிடர் செய்யநோக்கி
யிசைமல ரலங்கலொடு வாகையுஞ் சூடியா ரெய்தப் புனைந்த பெருமா
னிரும்புலியை மேருமுடி யேற்றிப் பெருந்தே ரிணங்குற வுருட்டிநேமி
திசைதிசை யுருட்டச்செய் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்திஞெேன் சிறுதே ருருட்டி யருளே.

சாதகப் பறவைக் கிரும்புயற் றுளியுஞ் சகோரத் தினுக்குதிக்குஞ்
சந்திரன் விடுங்காமு மம்புயத் திற்கெழு தாம்பரித் தேரிரவியு
மேதக வுறுந்தவத் திற்கருளு மவ்வருள் விளக்கத் திறுக்குழுவலு
மேவருங் கல்விக்கு நுண்ணறிவு நுண்ணறிவு வீக்கத் திறுக்கொழுக்கு
நோதக விலாதமைந் தாங்கருள் வழிச்செலீஇ நோய்ப்பிறவி:போக்குவார்க்கு
நோற்றவர் புராணமில் லாத மைதராதா நுவன்றெம்மை யாண்டபெம்மான்
நீதக மதித்திடாச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோனிறுத்திஞெேன் சிறுதே ருருட்டி யருளே.()

எய்குன்ற வார்சிலைப் பெருமா னுளத்துவகை யெய்தமறை யோர்கள் குழுமி
யையயவுப காணமெல் லாந்தகச் சேர்த்தினிய தென்னுமொரு தேந்தமர்ந்து
பொய்குன்ற யாகருண் டத்தழ லெழுப்பமேற் போயபூம் புகைவானெடு
பொலியுமுச் சைச்சிரவ மயிராவ தந்தான் பொறுத்தநிற மேவச்செயா

மெய்குன்ற வந்தவா றென்னெனக் கற்பகம் வெதும்பப் புரிந்து பின்னும்
விண்ணுடடங்கவு நண்ணு வரம்பையர் விழித்துணை யொருங்கி மைப்பச்
செய்குன்றை யம்பதிச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதே ருருட்டி யருளே.()

புழுங்குங் கதிர்ப்பரிதி யெழுமுறுக் குடைமுகப் புண்டரீகத் தடத்துப் [தே
பொலிதரச் சூழ்ந்துநிற் கின்றதரு விடபமலர் பொழிமது முழுக்க வீழ்ந்
தெழுங்குங் குமத்தோ ளிணைந்தமுலை யார்கள்கன விரதமன் றென்றுநீங்க[யா
வெறிதிரை கொளுங்காலை யளவிலோ திமமாங்க ணெய்திப் படிந்து துளை
வழுங்குந் தாத்தவாய் மேலெழமுன் னீங்கியோ ராகமுழு வதுநனைந்தே [குஞ்
யருமைவெண் முகில்செய்ய தேன்பொழித லெனவியந் தாகாய நோக்கிநிற்
செழுங்குன்றை யம்பதிச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டி யருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதே ருருட்டி யருளே.

வெங்கடிய வாணவ மலக்குருட் டிருளளம் வெரீஇப் பதறியோட் டொடுக்கும்
வெண்ணீறு சாதனம் விழைந்தவர்த முககமல மேவுற் றொருங்கு மலரும்
பங்கமுற மேவு பரசமயர்வா யாம்பல்பல வுந்துயர மைந்து குவியும்
பரவுவே தாகம புராணமெனு மங்கலப் பணைமிக் கெழுந்தொலிக்கு
மங்கலுழு மாதரா ரூடலி னெறிந்தகுழை யன்றித் தடுப்பாரில
ரவைகளையு மகலுற வகற்றினே மண்ணகத் தமையவெழு கின்றதாய
செங்கதி ரெனச்சொலச் சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே.
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதே ருருட்டி யருளே.

சுவையமையு மோதகங் கனிபலவு மற்றவுந் தும்பிமுக வற்குநல்கித்
தொழுவமுது செய்தலா லூறென் பதிந்தநகர் சூழ்நக ரினும்புகாது
நவையதடை யாதென்னி னச்சுமுதல் வலியவே நவிலவேண் டுவதினியெவ
னன்னுதற் றிருநீறு நிலவெறிக் கக்குழை நலங்கொண் மணி வெயிலெறிக்க
வவையகம் வியக்குமுப் புலவருண் முக்கனி யருந்தமிழ்ச் சுவையனைத்து
மாராய்ந் தெடுத்துப்பல் செய்யுண்முக மாவறிய வறிவித்த பெருநாவலன்
சிவையுதவு சொற்கொண்ட சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதே ருருட்டி யருளே.

பண்புகெழு நின்சரித் திரமினிய பாவாற் பரப்பிய திருக்கைலாய
பரம்பரை யுமாபதி சிவன்புகழு மவன்முன்னோர் பைம்புகழு மவன் வழிவரு
நண்புபுனை தவர்புகழு மினிமேலும் வருபவர் நயப்புகழு நீடுவாழ
நாடுவித நீசெய்த மாபுரா ணத்தமரு நாயன்மார் பெருமைவாழ
விண்புகழு நால்வர்திரு வாய்மலர்ந் தருடிரா விடவேத மென்றும் வாழ
மெய்யன் பினின்னு லயப்பணி முதற்புரி விருப்பமிக் கார்கள்வாழத்
திண்புவி யெடுத்தேத்து சேவையர் குலாதிபன் சிறுதே ருருட்டியருளே
சிறுகோ லெடுத்தரசு செங்கோ னிறுத்தினோன் சிறுதே ருருட்டி யருளே.

சேக்கிழார் பிள்ளைத்தமிழ் முற்றிற்று.

---

உ

சேக்கிழார்பிள்ளைத்தமிழ்ச்

# *சிறப்புப்பாயிரம்.



இது,

திருக்கைலாயபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து
அடியார்குழாத்தொருவரும், இந்நூலாசிரியரிடத்திற் கல்விபயின்றவருமாகிய
ஆறுமுகச்சுவாமிகளியற்றியது.

---

## அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

சீர்பூத்த பாலாற்றின் புனல்பரந்து காலாற்றிற் சேற லாலே
பார்பூத்த குடிதழைப்பப் பலவளனு மாங்காங்குப் பரவ வாக்கிக்
கூர்பூத்த வறிவான்மிக் கோர்பலரைத் தழுவியெளவை கூறுங் கூற்றை
நார்பூத்த நாடொறும்பார் நிறுவிவருந் தொண்டைவள நாட்டின் மாதோ. (௧)

மன்னியசீர் மறையொலியுந் தமிழ்வேத மறையொலியும் வயங்கு சீர்த்தி
துன்னியவா சகவொலியுந் தொண்டர்கள்செய் யரவொலியுந் துவன்றியெங்கு
முன்னியமற் றவர்க்குவே ளாண்குலத்தோ ருபசரிக்கு மொலியு மேன்மேன்
மின்னியகா லந்தொறும்விண் ணுடுசெவிடுறச்செய்குன்றைவியனூர்தன்னில்.

நிலந்தழைப்ப வெண்ணீற்று நெறிதழைப்ப வஞ்செழுத்து நிலவி மேன்மேல்
வலந்தழைப்ப வுயர்சைவம் வலிதழைப்ப மறுசமயம் வறப்பத் தொண்டர்
புலந்தழைப்ப வடியேம்விண் டலந்தழைப்ப கலந்தழைப்பப் பொலிவே ளாளர்
குலந்தழைப்பச் சேவையர்கள் குடிதழைப்பத் தமிழ்தழைப்பக் குறிப்பா ருய்ய.

உலகுய்யத் திருத்தில்லை நடநவில்வார் திருவருளா லொருவர் வந்து
கலவுபுகழ்ப் பாலறா வாயர்முனந் தோன்றியருட் கார ணார்த்தம்
விலகிலருண் மொழித்தேவ னெனும்பிள்ளைத் திருநாமம் விளங்கிப் பின்பு
சலவுசேக் கிழார்மரபு விளக்கலிற்சேக் கிழாரெனும்பேர் துலங்கப் பூண்டு.(௪)

காற்றுபகை யநபாய னமாத்தியராய்ப் பெருமுதன்மை கதிர்ப்பப் பெற்றுத்
தோற்றுபுறச் சமயமெலா மொருங்கவிய வென்றருளித் தொழுவார்க் கன்பு
தேற்றுதில்லை நடராசர் முதலருளத் திருத்தொண்டர் திருப்புராண
மாற்றுமல மருந்தெனவாய் மலர்ந்தருளும் பெரும்புகழார் மலர்ப்பூந் தாளில்.()

தேக்குபுகழ்ச் சோணாட்டிற் றிரிசிரா மலையின்மிகு திருவ மோங்குந்
தூக்குபுகழ் வேளாளர் குலாம்புதியிற் சிதம்பரவே லெங்கப் பன்று
வாக்குபுகழெனத்தோன்றிப் பலகலையு மொருங்கேயாய்ந் தான்றோர்பல்லோர்
வீக்குபுகழ் பரந்த கயிலாயபரம் பரையாகி விளங்கா நின்ற. (௬)

---

* இது பழையபதிப்பைச்சார்ந்தது. [பதிப்பித்தகாலம், கி. பி. 1876].

[redacted]



எங்கடுறை சைவயடைந்தம் பலவாண தேவனடி யினிது சூட்டத், திங்
கமுடி வாய்ந்தசிவ ஞானகலை யகங்கைகெல்லித் தோற்றத் தாய்ந்து, கங்கை
தரித் சருள்சடையோன் பலதலத்து மான்மியந்தன் கருத்தி னோர்ந்து, சங்கை
யில்செந் தமிழின்மொழி பெயர்த்தியற்றுங் கடப்பாட்டிற் றலைமை யானேன்.

யின்னுமா னடியன்றிக் கனவினும்வே றெண்ணாத விரதம் பூண்டோ
னின்னுமெம்போ லியர்பலருக் கிலக்கியமு மிலக்கணமு மெளிது தந்தோ
னன்னவன்பேர் மீனாட்சி சுந்தரநா வலவனென வாய்ந்தோ ரியாரும்
பன்னுபுகழ் பூதலமு மீதலமும் பாதலமும் பரவ நின்றோன். (அ)

மற்றவர்மான் மியப்பெருமை யருமையுட னுளத்துணர்ந்து மகிழ்பே
ரன்பாற், கற்றபய னின்றடைந்தோ மிம்மைமறு மைப்பயனுங் கதிர்க்கு
மீதேன், மற்றருமை பெருமைதொண்டர் புராணவிரா சியமுழுது மொருங்
கே தோன்றச், சொற்றபிள்ளைத் தமிழெனவோர் பாமாலை தொடுத்தனன்
மெய்த் திறவோர் போற்ற. (௯)

வென்றபக ழினையார்மான் மியந்தமிழால் விரித்தருளு மேன்மை யாளை
னொன்றுபுகழ் மரபிலுளா ரிதுநயத்தற் குரியரென வுவந்து சான்றோர்
கன்றுபோலி துறைசையிற்சுப் பிரமணிய குருமணியுண் ணயந்து நன்றென்
றென்றுமுடி யடிகடொறுந் தனக்கவலை வியக்கவரங் கேற்றி னானே. (௧௦)

---

